காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே. 85

வேலா யுதன்சங்கு சக்ராயு தன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன் தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்டென்
பாலா யுதம்வரு மோயம ஞேடு பகைக்கினுமே. 86

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே. 87

வணங்கித் துதிக்க அறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்றுவாய் கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கையலகை கொண்டாடப் பிசிதர் தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே. 88

பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதலை
தங்காலி லிட்ட தறிந்தில ஞேதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே. 89

மாலோன் மருகனை மன்ருடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே. 90

கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேல னைக்கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே. 91

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் குஞ்சுத்த
ஞானமென்னுந்
தண்டையம் புண்டரீ கந்தருவாய் சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண் டங்கொண்டு
மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட
காவலனே. 92

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதிறு லுலகமுங் கேட்டதுவே. 93

தெள்ளிய ஏனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட் டிலேசிறு வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச்
சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே.

யான்றனெ னுஞ்சொல் லிரண்டுங் கெட்டாலன்றி
[யாவருக்குந்
தோன்றுது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றன் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினுற்
சான்றுரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே. 95

தடக்கொற்ற வேள்மயி லேயிடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் றேகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே. 96

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணமுடி தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா யுதமும் பணிலமுமே. 97

கதிதனை யொன்றையுங் காண்கின்றி லேன்கந்த வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம்பாற் பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம் வேகின்றதே.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே. 99

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட் டியவா! கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே. 100

சலங்காணும் வேந்தர்தமக்கு மஞ்சார் யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே. 101

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறும் மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

இராப்பக லற்ற இடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே. 103

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே. 105

கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே. 106

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் தனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.

———

தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்
தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்

கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்
கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ

புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும் வளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூர

கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே
கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுனி கும்பிடுந் தம்பிரானே.

———

அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனே
இபமாமு கன்தனக் கிளையோனே
இமவான்ம டந்தையுத் தமிபாலா
ஜெபமாலை தந்தசற் குருநாதா
திருவாவி னன்குடிப் பெருமாளே.

நிருத ரார்க்கொரு காலா ஜேஜெய
சுரர்க ளேத்திடு வேலா ஜேஜெய
நிமல னார்க்கொரு பாலா ஜேஜெய விறலான
நெடிய வேற்படை யானே ஜேஜெய
எனஇ ராப்பகல் தானே நான்மிக
நினது தாட்டொழு மாறே தானினி யுடனேதான்

தரையி னாழ்த்திரை யேழே போலெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
சவலை தீர்த்துன தாளே சூடியு னடியார்வாழ்
சபையி னேற்றியின் ஞான போதமு
மருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேற்குமு னேநீ மேவுவ தொருநாளே

தருவி னாட்டர சாள்வான் வேணுவி
னுருவ மாய்ப்பல நாளே தானுறு
தவசி னாற்சிவ னீபோய் வானவர் சிறைதீரச்
சகல லோக்கிய மேதா னாளுறு
மசுர பார்த்திப னோடே சேயவர்
தமரை வேற்கொடு நீறு யேபட விழமோதென்

றருள ஏற்றம ரோடே போயவ
ருறையு மாக்கிரி யோடே தானையு
மழிய வீழ்த்தெதிர் சூரோ டேயம ரடலாகி
அமரில் வீட்டியும் வானோர் தானுறு
சிறையை மீட்டர னார்பால் மேவிய
அதிப ராக்ரம வீரா வானவர் பெருமாளே.

# கந்தரநுபூதி

—(o)—

## காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந் திடவே
பஞ்சக் கரவானை பதம் பணிவாம்.

## நூல்

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியானை சகோதரனே. 1

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனு நீ யலையோ
எல்லாமற என்னை யிழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே. 2

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே. 3

வளைபட்ட கைம் மாதொடு மக்க ளெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே. 4

மகமாயை களைந்திட வல்ல பிரான்
முகமாறு மொழிந்து மொழிந் திலனே
அகமாடை மடந்தைய ரென் றயருஞ்
சகமாயையுள் நின்று தயங்குவதே. 5

திணியா னமனேோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந்த மரும்புமதோ
பணியா வென வள்ளி பதம் பணியுந்
தணியா வதிமோக தயாபரனே. 6

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே. 7

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள் பேசியவா
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம்பொரு தானவ நாசகனே. 8

மட்டூர்குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டுசல் படும் பரிசென் றொழிவேன்
தட்டு டறவேல் சயிலத் தெறியும்
நிட்டுர நிராகுல நிர்ப் பயனே. 9

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார்ப வலாரி தலாரி யெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே. 10

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகாசல வேலவ நாலுகவித்
தியாகா சுரலோக சிகாமணியே. 11

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொரு ளொன்று மறிந்திலனே. 12

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. 13

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய்
மெய்வாய் விழி நாசியொடுஞ் செவியாம்
ஐவாய் வழி செல்லு மவாவினையே. 14

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங்கவ எண்குண பஞ்சரனே. 15

பேராசை யெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோக துரந்தரனே. 16

யாமோதிய கல்வியு மெம்மறிவுந்
தாமேபெற வேலவர் தந்ததனாற்
பூமேல் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே. 17

உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
பதிகா வலசூர பயங் கரனே. 18

வடிவுந் தனமும் மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வே லரசே
மிடியென் றொரு பாவி வெளிப் படினே. 19

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா வுபதேச முணர்த் தியவா
விரிதாரண விக்ரம வேளிமையோர்
புரிதாரக நாக புரந்தரனே. 20

கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூர விபாட ணனே. 21

காளைக் குமரேச னெனக்கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல் வள்ளி பதம்பணியும்
வேளைச் சுரபூபதி மேருவையே. 22

அடியைக் குறியா தறியா மையினுல்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேல் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே. 23

கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வே னருள் சேரவு மெண்ணுமதோ
சூர்வே ரொடுகுன் று தொளைத்தநெடும்
போர்வேல புரந்தர பூபதியே. 24

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ அடியே னலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலேறிய சேவகனே. 25

ஆதார மிலே னருளைப் பெறவே
நீதா னொரு சற்று நினைந்திலையே
வேதாகம ஞான விநோதமனோ
தீதா சுரலோக சிகாமணியே. 26

மின்னே நிகர்வாழ்வை விரும்பிய யான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலேறிய வானவனே. 27

ஆறு அமுதே அயில்வே லரசே
ஞானு கரனே நவிலத் தகுமோ
யானாகிய வென்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. 28

இல்லே யெனுமாயையி லிட்டனைநீ
பொல்லே னறியாமை பொறுத்திலையே
மல்லேபுரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வேலவனே. 29

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றெவ்வா ததெென வுணர்வித் ததுதான்
அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. 30

பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யென என்னை விதித்தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே. 31

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரி வேடர் குலப் பிடிதோய்
மலையே மலைகூறிடு வாகையனே. 32

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் று விடப் பெறுவேன்
மந்தா கினிதந்த வரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே. 33

சிங்கார மடந்தையர் தீநெறிபோய்
மங்காம லெனக் குவரந் தருவாய்
சங்க்ராம சிகாவல சண்முகனே
கங்கா நதி பால க்ருபாகரனே. 34

விதிகாணு முடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழ லென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே. 35

நாதா குமரா நமவென் றரனர்
ஓதா யெனவோ தியதெப் பொருள்தான்
வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. 36

கிரிவாய் விடுவிக் ரம *வேளிமையோர்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவால்
அரிவா யடியோடு மகந்தையையே. 37

ஆதாளியை யொன் றறியே னையறத்
தீதாளியை யாண் டதுசெப் புமதோ
கூதாள கிராத குலிக் கிறைவா
வேதாள கணம் புகழ்வே லவனே. 38

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவேடணை யென்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங்கர தேசிகனே. 39

வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங்கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே. 40

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனர் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயிலவா கனனே
யோகா சிவஞா னொபதேசிகனே. 41

குறியைக் குறியாது குறித்தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியாமையு மற்றதுவே. 42

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே. 43

---

* 'வேலிறையோன்' என்றும் பாடம்

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழும் கழலே. 44

கரவா கியகல்வி யுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோக தயாபரனே. 45

எந்தாயுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே. 46

ஆரு றையுநீத் ததன்மேல் நிலையைப்
பேரு வடியேன் பெறுமா றுளதோ
சீரு வருசூர் சிதைவித் திமையோர்
கூரு வுலகங் குளிர்வித் தவனே. 47

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவ ரோடுறும் வேலவனே. 48

தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையும் க்ருபைசூழ் சுடரே. 49

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திர ஞான சுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. 50

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவா யருள்வாய் குகனே. 51

உ
வெற்றிவேலுற்ற துணை

# வேல் விருத்தம்

மகரமள றிடைபுரள உரககண பணமவுலி
மதியுமிர வியுமலையவே
வளரெழிலி குடருழல இமையவர்கள் துயரகல
மகிழ்வுபெறு மறுசிறையவாஞ்
சிகரவரை மணமறுகு தொறுநுளைய மகளிர்செழு
செநெல்களொடு தரளமிடவே
செகசிரப கிரதிமுத னதிகள்கதி பெறவுததி
திடரடைய நுகரும் வடிவேல்
தகரமிரு கமதமென மணமருவு கடகலுழி
தருகவுளு முறுவளெயிறுங்
தழைசெவியு நுதல்விழியு முடையவொரு
கடவுள்மகிழ்
தருதுணைவ னமரர் குயிலுங்
குகரமலை யெயினர்குல மடமயிலு மெனவிருவர்
குயமொடமர் புரியுமுருகன்
குமரனறு முகனெதிரும் விருதுநிசி சரரணிகள்
குலையவிடு கொடிய வேலே. 1

வெங்காள கண்டர்கைச் சூலமுந் திருமாயன்
வெற்றிபெறு சுடராழியும்
விபுதர்பதி குலிசமுஞ் சூரன் குலங்கல்லி
வெல்லா வெனக்கருதியே
சங்க்ராம நீசயித் தருளெனத் தேவருஞ்
சதுர்முகனு நின்றிரப்பச்
சயிலமொடு சூரனுட லொருநொடியி லுருவியே
தனியாண்மை கொண்ட நெடுவேல்
கங்காளி சாமுண்டி வாராகி யிந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
கன்னிநா ரணிகுமரி த்ரிபுரைபயி ரவியமலை
கௌரிகா மாட்சிசைவ
சிங்காரி யாமளை பவானிகார்த் திகைகொற்றி
த்ரியம்பகி யளித்தசெல்வச்
சிறுவனறு முகன்முருக னிருதர்கள்கு லாந்தகன்
செம்பொற் றிருக்கைவேலே. 2

வேதாள பூதமொடு காளிகா ளாத்ரிகளும்
வெகுளுறு பசாசகணமும்

வெங்கழு குடன்கொடி பருந்துசெம் புவனத்தில்
வெம்பசி யொழிக்கவந்தே
ஆதார கமடமுங் கணபண வியாளமும்
அடக்கிய தடக்கிரியெலாம்
அலையநட மிடுநெடுந் தானவர் நிணத்தசை
யருந்திப் புரந்த வைவேல்
தாதார் மலர்ச்சுனைப் பழநிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகந்
தணிகைசெந் தூரிடைக் கழியாவி னன்குடி
தடங்கட லிலங்கையதனிற்
போதார் பொழிற்கதிர் காமத் தலத்தினைப்
புகழுமவ ரவர்நாவினிற்
புந்தியி லமர்ந்தவன் கந்தன்முரு கன்குகன்
புங்கவன் செங்கை வேலே. 3

அண்டருல குஞ்சுழல வெண்டிசைக ளுஞ்சுழல
அங்கியு முடன்சுழலவே
அலைகடல்க ளுஞ்சுழல அவுணருயி ருஞ்சுழல
அகிலதல முஞ்சுழலவே
மண்டல நிறைந்தரவி சதகோடி மதியுதிர
மாணப் பிறங்கியணியு
மணியொலியி னிற்சகல தலமுமரு ளச்சிரம
வகைவகையி னிற்சுழலவே
தண்டமுட னுங்கொடிய பாசமுட னுங்கரிய
சந்தமுட னும்பிறைகள் போற்
றந்தமுட னுந்தழலும் வெங்கணுட னும்பகடு
தன்புறம் வருஞ்சமனையான்
கண்டுகுலை யும்பொழுதி லஞ்சலென மென்சரண
கஞ்சமுத வுங்கருணைவேள்
கந்தன்முரு கன்குமரன் வண்குறவர் தம்புதல்வி
கணவனடல் கொண்ட வேலே. 4

ஆலமா யவுணருக் கமரருக் கமுதமா
யாதவனின் வெம்மையொளிமீ
தரியதவ முனிவருக் கிந்துவிற் றண்ணென்
றமைந்தன் பருக்கு முற்று
மூலமாம் வினையறுத் தவர்கள்வெம் பகையினை
முடித்திந்தி ரர்க்குமெட்டா

முடிவிலா நந்தனல் கும்பத மளித்தெந்த
மூதண்ட மும்புகழும்வேல்
ஏலவாம் யானையின் கோடதிற் சொரிமுத்து
மின்பணிக ளுமிழுமுத்து
மினிவாடை மான்மத மகிலோடு சந்தன
மிலவங்க நறவ மாருந்
தாலமா மரமுதற் பொருள்படைத் திடுமெயினர்
தருவனிதை *மகிழ்ந னையன்
தனிநடம் புரிசமர முருகனறு முகன்குகன்
சரவணக் குமரன வேலே. 5

பந்தாட விற்கழங் காடலிற் சுடரூசல்
பாடலினெ டாடலி னெலாம்
பழந்தெவ்வர் கட்கந் துணித்திந்தி ரற்கரசு
பாலித்த திறல் புகழ்ந்தே
சந்தாரு நாண்மலர்க் குழலரம் பையர்களுஞ்
சசிமங்கை யனையர் தாமுந்
தன்னையன் பொடுபாடி யாடும்ப்ர தாபமுந்
தலைமையும் பெற்ற வைவேல்
மந்தா கிநித்தரங் கச்சடில ருக்கரிய
மந்த்ரவுப தேச நல்கும்
வரதேசி கன்கிஞ்சு கச்சிகா லங்கார
வாரணக் கொடியு யர்த்தோன்
கொந்தார் மலர்க்கடம் புஞ்செச்சை மாலையுங்
குவளையுஞ் செங்காந்தளுங்
கூதாள மலருந் தொடுத்தணியு மார்பினன்
கோலத் திருக்கை வேலே. 6

அண்டங்க ளொருகோடி யாயினுங் குலகிரி
அநந்தமா யினுமேவிறு
லடையவுரு விப்புறம் போவதல் லதுதங்க
லறியாது சூரனுடலைக்
கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடியகொலை புரியு மதுசெங்
கனகா சலத்தைக் கடந்து முனை யிட்டுக்
கடக்கின்ற துங்கநெடுவேல்

---

*“குரவனையன்” என்றும் பாடம்.

தண்டந் தநுத்திகிரி சங்குகட் கங்கொண்ட
தானவாந் தகன் மாயவன்
தழல்விழிக் கொடுவரிப் பருவுடற் பஃறலைத்
தமனியச் சுடிகையின் மேல்
வண்டொன்று கமலத்து மங்கையுங் கடலாடை
மங்கையும் பதம்வருடவே
மதுமலர்க் கண்டுயில் முகுந்தன்மரு கன்குகன்
வாகைத் திருக்கை வேலே. 7

மாமுதல் தடிந்துதண் மல்குகிரி யூடுபோய்
வலியதா னவர்மார் பிடம்
வழிகண்டு கமலபவ னத்தனைச் சிறையிட்டு
மகவான் றனைச் சிறைவிடுத்
தோமஇரு டித்தலைவ ராசிபெற் றுயர்வானி
லும்பர்சொற் றுதிபெற்றநா
வுடையகீ ரன்றனது பாடல்பெற் றுலகுதனி
லொப்பில்புகழ் பெற்றவைவேல்
சோமகல சப்ரபா லங்கார தாஜடா
சூடிகா லாந்தகாலர்
துங்கரக்ஷ கத்ரோண கட்கசுலி சஞ்சூல
துரககே சரமாம்பரச்
சேமவட வாம்புயப் பரணசங் காபரண
திகம்பர த்ரியம்பகமகா
தேவநந் தனகஜா நநசகோ தரகுகன்
செம்பொற் றிருக்கை வேலே. 8

தேடுதற் கரிதான நவமணி யழுத்தியிடு
செங்கரனை யமுதம் வாய்கொள்
செயமளித் தருளெனக் கெனவுவப் பொடுவந்து
சேவடி பிடித்த தெனவும்
நீடுமைக் கடல்சுட்ட திற்கடைந் தெழுகடலு
நீயெமைக் காக்க வெனவும்
நிபுடமுடி நெடியகிரி யெந்தமைக் காவெனவு
நிகழ்கின்ற துங்க நெடுவேல்
ஆடுமைக் கணபணக் கதிர்முடிப் புடையெயிற்
றடலெரிக் கொடியவுக்ர
அழல்விழிப் படுகொலைக் கடையகட் செவியினுக்
கரசினைத் தனியெடுத்தே

சாடுமைப் புயலெனப் பசுநிறச் ரிகரியிற்
றுதிமித் துடனடிக்குஞ்
சமரமயில் வாகன னமரர்தொழு நாயகன்
சண்முகன் றன்கை வேலே. 9

வலாரியல லாகுலமி லாதகல வேகரிய
மாலறியு நாலு மறைநூல்
வலானலே விலானசி விலான்மலே விலானிவர்
மனோலய வுலாசமுறவே
யுலாவரு கலோலமக ராலய சலங்களு
முலோகநிலே நீர்நிலேயிலா
வொலாவொலி நிசாசர ருலோகம தெலாமழ
லுலாவிய நிலாவு கொலேவேல்
சிலாவட கலாவினொ தவாசிலி முகாவிலொச
ஞசின சிலாத ணிவிலா
சிலாமல ரெலாமதிய மோதிமதி சேலொழிய
சேவக சராப முகிலாம்
விலாசகலி யாணகலே சேரபசு மேலேமுலே
மேவிய விலாச வகலன்
விலாழியி னிலாழியகல் வானிலன லாரவிடு
வேழமிளே ஞன்கை வேலே. 10

———

உ

வேலுமயிலுந் துணே

# மயில் விருத்தம்

## காப்பு

சந்தன பாளித குங்கும புளகித சண்பக கடகபுயச்
சமர சிகாவல குமர சடானன சரவண குரவணியுங்
கொந்தள பாரகி ராதபு ராதநி கொண்க வெனப்பரவுங்
கூதள சீதள பாத மெனக்கருள் குஞ்சரி மஞ்சரிதோய்
கந்தக்ரு பாகர கோமள கும்பக ராதிப மோகரத
கரமுக சாமர கர்ண விசால கபோல விதானமதத்
தெந்த மகோதர மூஷிக வாகன சிந்துர பத்மமுகச்
சிவசுத கணபதி விக்ந விநாயக தெய்வ சகோதரனே.

## நூல்

சந்தான புஷ்பபரி மளகிண் கிணீமுகச்
சரணயுக ளமிர்தப்ரபா
சந்த்ரசே கரமூஷி காரூட வேகுமோக
சத்யப்ரி யாலிங்கனச்
சிந்தா மணிக்கலச கரகட கபோலத்ரி
யம்பக விநாயகன்முதற்
சிவனைவலம் வருமளவி லுலகடைய நொடியில்வரு
சித்ரக் கலாப மயிலாம்
மந்தா கிநிப்பிரப வதரங்க விதரங்க
வனசரோ தயகிர்த்திகா
வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
வராசலன் குலிசாயுதத்
திந்த்ராணி மங்கல்ய தந்துரட் சாபரண
இகல்வேல் விநோத னருள்கூ
ரிமையகிரி குமரிமக னேறுநீ லக்ரீவ
ரத்நக் கலாப மயிலே. 1

சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்துவெளி
பட்டு க்ரவுஞ்ச சயிலந்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பு மம்புவியுமெண்
டிக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
சித்ரப் பதம் பெயரவே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்கு மயிலாம்
பக்கத் திலொன்றுபடு பச்சைப் பசுங்கவுரி
பத்மப் பதங் கமழ்தரும்
பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்குரிய
பரம வுபதேச மறிவிக்
கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்தவொரு
கந்தச் சுவாமி தணிகைக்
கல்லார கிரியுருக வருகிரண மரகத
கலாபத்தி லிலகு மயிலே. 2

ஆதார பாதளம் பெயரவடி பெயரமூ
தண்டமுக டதுபெயரவே

யாடரவ முடிபெயர எண்டிசைகள் பெயரவெறி
கவுட்கிரி சரம் பெயரவே
வேதாள தாளங்க ளுக்கிசைய ஆடுவார்
மிக்கப் ரியப்படவிடா
விழிபவுரி கவுரிகண் டுளமகிழ விளையாடும்
விஸ்தார நிர்த்த மயிலாம்
மாதாநு பங்கியெனு மாலது சகோதரி
மகீதரி கிராத குலிமா
மறைமுநி குமாரிசா ரங்கனந் தனிவந்த
வள்ளிமணி நூபுர மலர்ப்
பாதார விந்தசே கரனேய மலருமுற்
பலகிரி யமர்ந்த பெருமாள்
படைநிருதர் கடகமுடை படநடவு பச்சைப்
பசுந்தோகை வாகை மயிலே. 3

யுககோடி முடிவின்மண் டியசண்ட மாருத
முதித்ததென் றயனஞ்சவே
ஒருகோடி யண்டரண் டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்
வெகுகோடி மலைகளு மடியினிற் றகர்ந்திரு
விசும்பிற் பறக்க விரிநீர்
வேலைசுவ றச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப் பறக்கு மயிலாம்
நககோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்தநர
கேசரி முராரி திருமால்
நாரணன் கேசவன் சீதரன் தேவகீ
நந்தனன் முகுந்தன் மருகன்
முககோடி நதிகரன் குருகோடி யநவரத
முகிலுலவு நீல கிரிவாழ்
முருகனுமை குமரனறு முகனடவு விகடதட
மூரிக் கலாப மயிலே. 4

சோதியிம வேதண்ட கன்னிகையர் தந்தவபி
நயதுல்ய சோம வதன
துங்கத்ரி சூலதரி கங்காளி சிவகாம
சுந்தரி பயந்த நிரைசே
ராதிநெடு மூதண்ட அண்டபகி ரண்டங்க
ளியாவுங் கொடுஞ்சிறகினு

லணையுந்த னதுபேடை யண்டங்க ளென்னவே
யணைக்குங் கலாப மயிலாம்
நீதிமறை யோதண்ட முப்பத்து முக்கோடி
நித்தரும் பரவு கிரியாம்
நீலகிரி வேலவ னிராலம்ப நிர்ப்பய
னிர்வியா குலன் சங்குவாள்
மாதிகிரி கோதண்ட தண்டங் தரித்தபுயன்
மாதவன் முராரி திருமால்
மதுகைட வாரிதிரு மருகன்முரு கன்குமரன்
வரமுதவு வாகை மயிலே. 5

சங்கார காலமென அரிபிரமர் வெருவுறச்
சகல லோகமு நடுங்கச்
சந்த்ரசூ ரியரொளித் திந்த்ராதி யமரருஞ்
சஞ்சலப் படவுமையுடன்
கங்காளர் தனிநாட கஞ்செய்த போதந்த
காரம் பிறந்திட நெடுங்
ககனகூ டமுமேலை முகடுமு டியபசுங்
கற்றைக் கலாப மயிலாஞ்
சிங்கார குங்கும படீரம்ருக மதயுகள
சித்ரப் பயோதரகிரித்
தெய்வவா ரணவநிதை புனிதன் குமாரன்
திருத்தணி மகீதரனிருங்
கெங்கா தரன்கீத மாகிய சுராலய
க்ருபாகரன் கார்த்தி கேயன்
கீர்த்திமா வசுரர்கள் மடியக்ர வுஞ்சகிரி
கிழிபட நடாவு மயிலே. 6

தீரப் பயோததி திக்குமா காயமும்
செகதலமு நின்று சுழலத்
திகழ்கின்ற முடிமவுலி சிதறிவிழ வெஞ்சிகைத்
தீக்கொப் புளிக்க வெருளும்
பாரப் பணமுடி யநந்தன்முத லரவெலாம்
பதைபதைத் தேநடுங்கப்
படர்சக்ர வாளகிரி துகள்படவை யாளிவரு
பச்சைப்ர வாள மயிலாம்
ஆரப்ர தாபபுள கிதமதன பாடீர
அமிர்தகலசக் கொங்கையாள்

ஆடுமயில் நிகர்வல்லி அபிராம வல்லிபர
மாநந்த வல்லி சிறுவன்
கோரத்ரி சூலத்ரி யம்பக ஜடாதார
குருதரு திருத்தணிகைவேள்
கொடியநிசி சரருதர மெரிபுகுத விபுதர்பதி
குடிபுகுத நடவு மயிலே. 7

செக்கரள கேசசிக ரத்நபுரி ராசிநிரை
சிந்தப் புராரி யமிர்தந்
திரும்பப் பிறந்ததென ஆயிரம் பகுவாய்கள்
தீவிஷங் கொப்புளிப்பச்
சக்ரகிரி சூழவரு மண்டலங் கள்சகல
சங்கார கோர நயனத்
தறுகண்வா சுகிபணு முடியெடுத் துதறுமொரு
சண்டப்ர சண்டமயிலாம்
விக்ரம கிராதகுலி புனமீ துலாவிய
விருத்தன் திருத்தணிகைவாழ்
வேலாயு தன்பழ வினைத்துய ரறுத்தெனை
வெளிப்பட வுணர்த்தி யருளித்
துக்கசுக பேதமற வாழ்வித்த கந்த
சுவாமிவா கனமானதோர்
துரககஜ ரதகடக விகடதட நிருதர்குல
துஷ்டர் நிஷ்டுர மயிலே. 8

சிகரதம னியமேரு கிரிரசத கிரிநீல
கிரியெனவு மாயிரமுகத்
தெய்வநதி காளிந்தி யெனநீழ லிட்டுவெண்
திங்கள்சங் கெனவும்ப்ரபா
நிகரெனவு மெழுதரிய நேமியென வுலகடைய
நின்றமா முகிலென்னவே
நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு
நீலக்கலாப மயிலாம்
அகருமரு மணம்வீசு தணிகையபி ராமவே
ளடியவர்கள் மிடியகலவே
யடல்வேல் கரத்தசைய ஆறிரு புயங்களி
லலங்கற் குழாமசையவே
மகரகன கோமளக் குண்டலம் பலவசைய
வல்லவுணர் மனமசையமால்

வரையசைய உரகபில மசையவெண் டிசையசைய
வையாளி யேறு மயிலே. 9

நிராசத விராசத வரோதய பராபர
னிராகுல னிராமய பிரா
னிலாதெழு தலாலற மிலானெறி யிலானெறி
நிலாவிய வுலாசவி தயன்
குராமலி விராவுமிழ் பராரை யமராநிழல்
குராநிழல் பராவு தணிகைக்
குலாசல சராசர மெலாமினி துலாவிய
குலாவிய கலாப மயிலாம்
புராரிகும ராகுரு பராவெனும் வரோதய
புராதன முராரி மருகன்
புலோமசை சலாமிடு பலாசன வலாரிபுக
லாகுமயி லாயுதனெடுந்
தராதல கிராதர்கள் குலாதவபி ராமவல
சாதனன் விநோத சமரன்
தடாரி விகடாசுரன் குடாரித படாதிகழ்
சடாநந னடாவு மயிலே. 10

எந்நாளு மொருசுனையி லிந்த்ரநீ லப்போ
திலங்கிய திருத்தணிகைவாழ்
எம்பிரா னிமையவர்கள் தம்பிரா னேறுமொரு
தம்பிரா னுன மயிலைப்
பன்னுளு மடிபரவு மருணகிரி நாதன்
பகர்ந்தவதி மதுர சித்ரப்
பாடல்தரு மாசறு விருத்தமொரு பத்தும்
படிப்பவர்க ளாதி மறைநூல்
மன்னுன் முகம்பெறுவ ரன்னமே றப்பெறுவர்
வாணிதழு வப்பெறுவரால்
மகரால யம்பெறுவ ருவணமே றப்பெறுவர்
வாரிச மடந்தையுடன் வாழ்
அந்நாய கம்பெறுவ ரயிராவ தம்பெறுவ
ரமுதா சனம்பெறுவர்மே
லாயிரம் பிறைதொழுவர் சீர்பெறுவர் பேர்பெறுவர்
அழியா வரம்பெறுவரே. 11

———

பகழிக்கூத்தர் அருளிச் செய்த

திருச்செந்தூர்ப்

# பிள்ளைத் தமிழ்

பாம்பா லுததி தனைக்கடைந்து
படருங் கொடுங்கார் சொரிமழைக்குப்
பரிய வரையைக் குடைகவித்துப்
பசுக்கள் வெருவிப் பதறுமற்
காம்பா லிசையின் றெனியழைத்துக்
கதறுந் தமரக் காளிந்திக்
கரையி னிரைப்பின் னேநடந்த
கண்ணன் மருகா முகையுடைக்கும்
பூம்பா சடைப்பங் கயத்தடத்திற்
புனிற்றுக் கவரி முலைநெரித்துப்
பொழியு மமுதந் தனைக்கண்டு
புனலைப் பிரித்துப் பேட்டெகினந்
தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ. 1

மங்கல மங்கலநூ லெங்குமொ ழிந்தனர்காண்
வானோ ரேனோர்போய்
வந்துவ ணங்கினர்மே லந்தர துந்துபிகேள்
வாரு டாடாதே
கொங்கைசு மந்திடைநூ லஞ்சும ணங்கனையார்
கூடா தூடாரோ
கொண்டவ ரந்தருவா யண்டர்பெ ருந்தவமே
கோமா ரூமாநீ
செங்கம லந்தனிலே பைங்குமு தங்களிலே
சேல்பாய் வானூடா
தென்றலு டன்தமிழ்தேர்தென்பொதி யம்பயில்வாழ்
தேனூர் தார்மார்பா
சங்குவ லம்புரிசூழ் செந்தில்வ ளம்பதியாய்
தாலோ தாலேலோ
சங்கரி தன்குமரா மங்கையர் தங்கணவா
த்தாலோ தாலேலோ. 2

# திருமுருகாற்றுப்படை

*[நக்கீரதேவர் அருளியது]*

## 1. திருப்பரங்குன்றம்

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளி
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழைச்
சேணிகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணையீர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாட் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகள்அறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்

நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென்று ஏத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடர்இலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதிற் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி ஆடிய கூர்உகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித் தோள் பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க
இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்புரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புநன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்

பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன்; அதா அன்று.

## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டும் மருங்கிற் கடுநடைக்
கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந்து அன்ன வேழமேல் கொண்டு
ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்உறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வருஉம் வகைஅமை
பொலங்குழை
சேண்விளங்கு இயற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவில் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்நேர்பு எழுதரு வாள்நிற முகனே
மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம் ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத் தன்றே, ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்விஓர்க் கும்மே, ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே, ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே, ஒரு
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின் [முகம்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்

ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒரு கை
உக்கம் சேர்த்தியது ஒருகை
நலம்பெறு கலிங்கத்துக்குறங்கின்மிசை
அசைஇயது ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை, இருகை
ஐயிரு வட்டமோடு எஃகுவலம் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய, ஒரு கை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, ஒருகை
பாடின் படுமணி இரட்ட, ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய, ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட, ஆங்கப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியம் கறங்கத் திண்காழ்
வயிர் எழுந்து இசைப்ப வால்வளை ஞரல
உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்பாறுக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே; அதா
அன்று.

## 3. திருவாவினன்குடி

சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனிஇல் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந்து அன்ன மாசில் தூஉடை

முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்நரம்பு உளர
நோய்இன்று இயன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர் இன்நகைப்
பருமம் தாங்கிய பணிந்தேந்து அல்குல்
மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிற்று
அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்அணி நீள்கொடிச் செல்வனும் வெள்ஏறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக
ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்
பகலில் தோன்றும் இகலில் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீஎழுந் தன்ன திறலினர் தீப்பட
உரும்இடித் தன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கின்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்

தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன்; அதா அன்று.

## 4. திருவேரகம்

இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமை நல்லியாண்டு
ஆறினிற் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்; அதா அன்று.

## 5. குன்றுதோருடல்

பைங்கொடி நறைக்காய் இடைஇடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர
விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வாலிணர் இடைஇடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்

கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலம்
கொடியன் நெடியன் தொடிஅணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோறாடலும் நின்றதன்பண்பே; அதா
அன்று.

## 3. பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறிஅயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்
மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர
நெய்யொடு ஐயவி அப்பி ஐதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நல்நகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழ்இசை அருவியொடு இன்இயம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்

முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்
ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே
ஆண்டாண்டு ஆயினும் ஆகக் காண்தக
முந்து நீ கண்டுழி முகன் அமர்ந்து ஏத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபேராள
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றாடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசில் எனப்பல
யான்அறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்

நின்அடி உள்ளி வந்தனன் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமை யோய்எனக்
குறித்தது மொழியா அளவையிற் குறித்துடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய
பெறல்அரும் பரிசில் நல்குமதி பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆர முழுமுதல் உருட்டி வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் அலர்இறல் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு

ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

---

குன்ற மெறிந்தாய் குரைகடலில் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் னுள்ளத் துறை. 1

குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
தொளைத்தவே லுண்டே துணை. 3

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்-பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. 5

அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன். 6

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்கா யினி. 8

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினுல்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும். 10

உ

## திருப்புகழ் அஷ்டோத்தரசத திவ்விய நாமங்கள்

ஓம் போத நிர்க்குண போதா நமோ நம
,, நாத நிஷ்கள நாதா நமோ நம
,, பூரணக் கலை சாரா நமோ நம
,, பஞ்சபாண பூபன் மைத்துன பூபா நமோ நம
,, நீப புஷ்பக தாளா நமோ நம
,, போக சொர்க்கபு பாலா நமோ நம
,, சங்கமேறும் மாதமிழ்த்ரய சேயே நமோ நம
,, வேத னத்ரய வேளே நமோ நம
,, வாழ் சகத்ரய வாழ்வே நமோ நம
,, வேத வித்தகா சாமீ நமோ நம 10
,, வேல் மிகுத்த மாசூரா நமோ நம
,, வீம சரக்யூ காளா நமோ நம
,, விந்துநாத வீரபத்ம சீர்பாதா நமோ நம
,, நீளமிக்க கூதாளா நமோ நம
,, மேக மொத்த மாயூரா நமோ நம
,, விண்டிடாத போத மொத்த பேர் போதா நமோ நம
,, பூத மற்றுமே யானுய் நமோ நம
,, பூரணத்துளே வாழ்வாய் நமோ நம
,, துங்கமேவும் பூதரத் தெலாம் வாழ்வாய் நமோ நம
,, ஆறிரட்டி நீள் தோளா நமோ நம 20
,, பூஷணத்துமா மார்பா நமோ நம
,, ஆர்யை பெற்ற சீராளா நமோ நம
,, சூரையட்டு நீள் பேரா நமோ நம
,, ஆரணத்தினுர் வாழ்வே நமோ நம
,, சீதள வாரிஜ பாதா நமோ நம
,, நாரத கீத விநோதா நமோ நம
,, சேவல மாமயில் ப்ரீதா நமோ நம
,, மறை தேடுஞ் சேகரமான ப்ரதாபா நமோ நம
,, ஆகம சார சொரூபா நமோ நம

ஓம் தேவர்கள் சேனை மகிபா நமோ நம 30
,, கதி தோயப் பாதக நீவு குடாரா நமோ நம
,, மாவசுரேச கடோரா நமோ நம
,, பாரினிலே ஜய வீரா நமோ நம
,, மலைமாது பார்வதியாள் தரு பாலா நமோ நம
,, நாவல ஞான மனோலா நமோ நம
,, பால குமார சுவாமீ நமோ நம
,, நாத விந்து கலாதீ நமோ நம
,, வேத மந்த்ர சொரூபா நமோ நம
,, ஞான பண்டித சாமீ நமோ நம
,, வெகு கோடி நாமசம்பு குமாரா நமோ நம 40

,, போக அந்தரி பாலா நமோ நம
,, பரசூரர் சேததண்ட விநோதா நமோ நம
,, கீத கிண்கிணி பாதா நமோ நம
,, தீர சம்ப்ரம வீரா நமோ நம
,, கிரிராஜ தீபமங்கள ஜோதீ நமோ நம
,, தூய அம்பல லீலா நமோ நம
,, தேவ குஞ்சரி பாகா நமோ நம
,, போதகந் தரு கோவே நமோ நம
,, நீதி தங்கிய தேவா நமோ நம 50

,, பூதலந் தனை யாள்வாய் நமோ நம
,, பணியாவும் பூணுகின்ற பிரானே நமோ நம
,, வேடர் தங்கொடி மாலா நமோ நம
,, போதவன் புகழ் சாமீ நமோ நம
,, அரிதான வேத மந்திர ரூபா நமோ நம
,, ஞான பண்டித நாதா நமோ நம
,, வீர கண்டை கொள் தாளா நமோ நம
,, அழகான மேனி தங்கிய வேளே நமோ நம
,, வீறு கொண்ட விசாகா நமோ நம 60

,, சிவசிவ ஹரஹர தேவா நமோ நம
,, தெரிசன பரகதி யானாய் நமோ நம
,, திசையினு மிசையினும் வாழ்வே நமோ நம
,, செஞ்சொல் சேரும் திருதருகலவி மணாளா நமோ நம
,, திரிபுர மெரிசெய்த கோவே நமோ நம
,, ஜெய ஜெய ஹரஹர தேவா நமோ நம
,, உம்பர்கள் ஸ்வாமீ நமோ நம
,, எம்பெருமானே நமோ நம
,, ஒண்டொடி மோகா நமோ நம

ஓம் சரவண ஜாதா நமோ நம 70
,, கருணைய தீதா நமோ நம
,, சததள பாதா நமோ நம
,, அபிராம தருணக தீரா நமோ நம
,, நிருபமர் வீரா நமோ நம
,, சமதள வூரா நமோ நம
,, ஜகதீச பரம சொரூபா நமோ நம
,, சுரர்பதி பூபா நமோ நம
,, பரிமள நீபா நமோ நம
,, உமைகாளி பகவதி பாலா நமோ நம
,, இகபர மூலா நமோ நம 80
,, பவுருஷ சீலா நமோ நம
,, சத்தி பாணீ நமோ நம
,, முத்தி ஞானீ நமோ நம
,, தத்வ ஆதீ நமோ நம
,, விந்துநாத சத்துரூபா நமோ நம
,, ரத்ன தீபா நமோ நம
,, தற்ப்ர தாபா நமோ நம
,, சிங்கார ரூப மயில் வாகன நமோ நம
,, கந்தா குமாரசிவ தேசிக நமோ நம
,, சிந்தூர பார்வதி சுதாகர நமோ நம 90
,, விருதோதை சிந்தான சோதி கதிர்வேலவ நமோ நம
,, கங்காள வேணிகுரு வானவ நமோ நம
,, அரிமரு கோனே நமோ நம
,, அறுதி யிலானே நமோ நம
,, அறுமுக வேளே நமோ நம
,, அரகர சேயே நமோ நம
,, இமையவர் வாழ்வே நமோ நம
,, அருண சொரூபா நமோ நம
,, தென்பரங் குன்றுறை தேவா நமோ நம
,, செந்திலம் பதிவளர் சேயே நமோ நம 100
,, தென்பழநிமலை மேவு தீரா நமோ நம
,, திருவே ரகத்திலுறை தேனே நமோ நம
,, குன்றுதோ ரூடல்புரி குமரா நமோ நம
,, பழமுதிர் சோலை வளர் பதியே நமோ நம
,, மயில்மிசை வருமொரு வரதா நமோ நம
,, சேகர வாரண வேல்வீரா நமோ நம
,, மைவருங் கண்டத்தர் மைந்தா நமோ நம
,, குருவாய் வருவாய் குகனே நமோ நம

**நாநாவித மந்த்ர பரிமள பத்ர புஷ்பாணி சமர்ப்பயாமி**

## எமது வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. | 6-00 |
| 2. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. | 2-50 |
| 3. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. | 5-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—மூன்றாவது தொகுதி (மூன்றாவது படைவீடு—பழநி) | ரூ. | 5-00 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படை வீடு—சுவாமிமலை | ரூ. | 2-50 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோறாடல் முதற்பாகம் | ரூ. | 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோறாடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. | 5-00 |
| 8. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. | 1-50 |
| 9. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. | 3-00 |
| 10. | திருவகுப்பு கந்தரந்தாதி (உரையுடன்) கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வேல் விருத்தம் மயில் விருத்தம் (இவை முழுவதும்) | ரூ. | 1-50 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. | 2-00 |
| 12. | மகாபாரதம்: வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரரார் பாடல்களுடன் கூடியது | ரூ. | 4-00 |
| 13. | ஸ்ரீ ஸுப்பிரமணிய ஸஹஸ்ரநாமம் (உரையுடன்) | ரூ. | 1-50 |
| 14. | அறிவுரையமுது (30 கட்டுரைகள்) | ரூ. | 0-50 |
| 15. | திருவாசகத்தேன் (கட்டுரைகள்) | ரூ. | 0-50 |
| 16. | செந்தமிழ் இன்பம் (23 கட்டுரைகள்) | ரூ. | 0-50 |

(எல்லாவற்றுக்கும் தபால் செலவு வேறு

**திருப்புகழமிர்தம் காரியாலயம்**

89, சிங்கண்ண செட்டித் தெரு,

சிந்தாதிரிப்பேட்டை, சென்னை—2.